180. குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் றலைமேற் கொண்டார்
உலகினிற் றீர்த்த மெல்லா முற்றபே றடைவார் போல
நலமெய் யாகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார்.

இந்நூலைக் கற்றறிந்தோர் ஞானசாஸ்திரம் பலவற்றையுங் கற்றறிந்தோராவரெனத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல்.

† சற்குருவின் திருவடியி லபிஷேகஞ்செய்த தீர்த்தத்தைத் தமது சிரசில் புரோட்சித்து (தெளித்து)க் கொண்டவர் அதனால் கங்கை முதலிய புண்ணிய தீர்த்த மனைத்திலுஞ் சென்று மூழ்கினோரடையும் பயனெல்லா மடைவர்; அதுபோல, கைவல்லிய நவநீத மென்னு மிந்த மெய்ஞ்ஞான சாஸ்திரத்தைச் சற்குரு வாயிலாக வரலாற்று முறையாகக் கற்றறிந்தவர் * ஞானசாஸ்திரம் பலவற்றினையும் படித்துணர்ந்த ஞானிகளைப்போலச் சிறப்புற்று வாழ்வர். 180

† "நான் குருவின் பாதோதகத்தை (திருவடி யபிஷேக ஜலத்தை)ப் பருகி, மிஞ்சியதைச் சிரத்திற் றெளித்துக்கொண்டு, அதனால் தீர்த்தமனைத்திலும் மூழ்கியதன் பயனை யடைகின்றான்." என்று குருகீதை முதலத்தியாயங் கூறுவதும்,

"தீர்த்தம் பிரசாதந் திருநீறுஞ் சக்கரமும், சாற்றுமிறை கட்பிறந்த தாழ்வடமும் போற்றும், குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாங், கருவகலக் கட்டுரைத்தேங் காண்" என்று சிவஞானப் பிரகாச வெண்பா கூறுவதும்,

"ஓதிய பரம யோகி யுண்டதெவ் வுலக மூண்ட, தாதலா லவனைப் பூசித் தவனுல கங்கண் மூன்றும், கோதிலாச் சிவன்மா லோடுங் கூடவே குறைவில் பூசை, காதலாற் செய்தா னென்றே யருளினன் கருணை வாரி" என்று சிவஞானநிலயங் கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம்.

* இங்ஙனங் கூறினமையால், இதனைக் கற்றறிந்தவர் ஞானசாஸ்திரம் பலவற்றையும் பிறர்க் கோதுவிப்பதற் காசிரியராவரென்பது பெறப்பட்டது; படவே, இந்நூ லின்றியமையாது கற்கத்தக்கதா மென்பதாயிற்று.

இரண்டாவது சந்தேகந் தெளிதற்படலம்

முற்றிற்று.

கைவல்லிய நவநீதத்தின்
தத்துவ விளக்கப் படலம் பாயிரம் உட்படச் செய்யுள் 108;
சந்தேகந் தெளிதற் படலம் செய்யுள் 180;
ஆகச்செய்யுள் 288-ஆம்.

கைவல்லிய நவநீத வசன வினு விடை
விரிவுரையுடன்
முற்றுப் பெற்றது.

ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நம:

## கைவல்லிய நவநீத நூலாசிரியரது மாணாக்கரு ளொருவர் அவரையும், அந்நூலையும் வியந்து துதித்தல்.

1. அண்ணறன் னருளி னாலே யகம்புற மின்றி யொன்றாய்
எண்ணமி லிலக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன
நண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே
கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் றாண்ட வேசன்.

அண்ணல் - நாராயண தேசிகர், இலக்கியார்த்தம் - தத்துவம் பதங் களின் இலக்கியார்த்தமாய கூடஸ்தப் பிரஹ்மம்; நாதத்தினுபாதி - மாயா காரியம்; கண்ணதாய் - அறிவாய்.

2. ஆன்ற பதமா மூன்றற்கு மதுநீ யானா யெனும்பொருளிற்
சான்ற துரியா தீதத்திற் றடையற் றிலங்கொண் சைதந்நியப்,
ஊன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையு மூடறுத்
தோன்றித தானே தானாவர் துலங்குந் தமக்கே சுவாநுபவம்.[துத்

பதமாமூன்று - தத்துவமசி; துரியாதீதம் - துரியாதீத மென்னும் ஏழாவது ஞானபூமி; தடை - மறைப்பு; விகற்பமயக்கு - பேதப் பிராந்தி; தடை - பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தம், ஆகாமியப்பிரதிபந்தம்; சுவாநுபவம் - ஆதமானுபவம்.

3. என்னு மாவாக் கியநான்கு மிசைக்கும் வித்தி யாநந்தம்
சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதித்தோர் துகளற்றோர்
இன்ன மாணாக் கன்குருவாற் சந்தே கநீர்ந் திடுபதத்தே
துன்னி நிறைந்து நின்றோர்க டூய முத்த ராகுவரே.

துகளற்றோர் - பாவமற்றவராவர்; பதத்து - ஆத்மாவும் பிரஹ்மமு மொன்றே யென்னும் நிச்சயத்தில்; தூயமுத்தர் - சீவன்முத்தர்.

4. தத்துவ விளக்கத் தாலுஞ் சந்தேகந் தெளித லாலும்
ஒத்திருள் விடாத மாயா வுள்ளிரு ளிரிய வோங்கும்
சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்தி பேதப்
புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித் தாண்டான்.

இருள் - சந்தேகவிபரீதம்; மாயாவுள்ளிருள் - மாயையென்னுஞ் சொரூபாவரணம்; விருத்திபேதப்புத்தியால் - பலதலைப்பட்டு விரிந்த புத்தி விருத்தியால்; புரையற - குற்றமற.

5. ஆண்டதே சிகனு மைய னூரண னநந்தன் பாதம்
பூண்டவா ரோபத் தான்முன் பொய்ம்மயக் காய்வர் தத்தை
மாண்டகல்லவா தத்தான் மாய்த்தரு ளோக்கத் தென்றும்
காண்டிட வைத்த வித்த காரணு போற்றி போற்றி.

நாரண னநந்தன் - நாராயண னென்னு முடிவற்றவன்; அ(வ்) வாரோபத்தால் - அவ்வத்தியாசத்தால் (காரணஞ்ஞானத்தால்); பொய்ம் மயக் காய்வர் தத்தை - மித்தையாய்த் தோன்றிய பிரபஞ்சத்தை; மாண்ட - சிறந்த; மாய்த்து - கெடுத்து; அருளோக்கத்து - கிருபாநோக்கத்தால்; காண்டிட - காண; போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம்.

---

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு திருவடிவாழ்க.

---

